# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி – ஆடி – 2017 – ஜுலை

11.07.2017 அன்று நடைபெற்ற திருமந்திரம் உரை நூல் வெளியீட்டு விழா

இடமிருந்து வலம் : முனைவர் கரு.முத்தையா (உரை ஆசிரியர்) முனைவர் சே. குமரப்பன், புலவர் முத்து சண்முகம், கோவிலூர் ஆதீனம், முனைவர் சுப. திண்ணப்பன், திருமதி திண்ணப்பன்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - ஆடி - 2017 - ஜுலை இதழ் - 61

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :-
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்


KOVILOOR ... DAVAR
A. No. 61
LIBRARY, KOVILOOR

# இறை வணக்கம்

நீர்தாங்கு சடைமுடியன் புவன நாதன்
நிறைமதியம் பிறங்குமுடி சூடும் ஈசன்
நித்திலப்பொன் திருக்கோவில் உறையும் சாமி
ஏர்பரந்த செம்மெனிச் சிவனில் பாதி
இடங்கொண்ட திருநெல்லை என்னும் தேவி
எல்லையிலாப் பேரழகி அடியர் போற்றும்
பேர்பரந்த பெருமாட்டி பெருமை கொண்ட
பேரரசி தேனாற்றைக் காக்கும் கன்னி
இறையவளை வணங்குவதே எமது வேலை
கார்பரந்த குழலுடையாள் கனக மேனிக்
கடவுளாம் சிவனுக்குத் துணையாய் ஆன
கன்னியாம் திருநெல்லை காப்பாள் மெய்யே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

சிறு விதைதான் பெரிய மரமாக வளர்கிறது. நூற்றுக் கணக்கான வருடமாக வளர்கிறது. ஆயிரக் கணக்கான பழங்களை ஆண்டுதோறும் வழங்குகிறது. இவை அனைத்திற்கும் ஆதாரம், ஆதி காரணம் சிறு விதையே. வேதாந்த நூல்களிலே பயிர் வெளியே வரக்கூடிய தருணத்திலே இருக்கின்ற விதைக்கு “மகத்” என்று சொல்வார்கள். ஓர் உயிரைப் பிறப்பிக்கக் கூடிய தருணத்திலே உள்ள விதை மகத் (மேன்மை பொருந்தியது) என்று பெருமையாக அழைக்கப்படுகின்றது.

அதே போல நம்முடைய மழலைச் செல்வங்கள் மனதிலே விதைக்கப் படுகின்ற உயர்ந்த கருத்துக்கள், பண்புகள் வளர்ந்தோங்கித் தனக்கும் சமுதாயத்திற்கும் பயன் மிக்கதாக அமையும். இதுவே, விதைக்காமல் பூமி எதுவும் தருவதில்லை என்பது போல மக்கள் சொல்வதை ஏற்பது எப்படி? பண்புகளை, மரபுகளை மனத்திலே விதைத்து அவற்றை ஆரோக்கியமாக உரமிட்டு வளர்க்காமல் நம் குழந்தைகளுக்கு ஒன்றுமே தெரியவில்லை, நல்ல பழக்க வழக்கங்கள் இல்லை என்று புலம்புவதால் எந்தப் பயனும் இல்லை.

சமீபத்தில் மருத்துவக் கல்லூரிகளிலும், பெருமை மிக்க பொறியியல் கல்லூரிகளிலும் இடம் பெற்ற அரசுக் கல்லூரி மாணவர்கள் இராமநாதபுரம் மாவட்டத்திலே அதிகமாக உள்ளனர் என்று செய்தி வெளியாகியுள்ளது. அதற்கு என்ன காரணம் எனக் கேட்டால் கடந்த ஆறு ஏழு ஆண்டுகளாக எலைட் என்று அழைக்கப்படும் சிறப்புப் பயிற்சி வகுப்புகளும் கற்பதில் பின்தங்கியுள்ள மாணவர்களுக்குத் தனி வகுப்புகளும் இராமநாதபுர மாவட்டத்திலே சிறப்பாக நடைபெறுகின்றன. எனவேதான் எங்கள் பிள்ளைகள் நல்ல கல்லூரிகளிலே இடம் பிடித்துள்ளனர் என்று

கல்வித்துறையைச் சார்ந்த அதிகாரிகள் தெரிவித்துள்ளனர். இதனை எல்லா அரசுத்துறைகளும் பின்பற்றினால் பள்ளிகள் மட்டுமல்லாமல் எல்லாத் துறைகளிலும் சிறந்து விளங்க முடியும் என்பது யாவருக்கும் புரியும்.

எனவே விதைத்தல், நீர் வார்த்தல், உரமிடுதல், பாதுகாத்தல் என்பவற்றை அக்கறையோடும், சிரத்தையோடும் செய்நேர்த்தியோடும் செய்தால் யாவற்றிலும் நல்ல பயன் நிச்சயமாகக் கிடைக்கும்.

இந்தக் கருத்தை மனதில் கொண்டே நாம் திருக்குறள் முற்றோதல் பணியைத் தொடங்கினோம். நம்முடைய ஆசிரியப் பெருமான், முதுபெரும் பேராசிரியர் தமிழண்ணல் அவர்கள் கூறியது போல நம் குழந்தைகள் குறைந்தது நூறு திருக்குறளாவது பொருளோடு அறிந்து அதன் கருத்துக்களைக் கடைப்பிடித்து வந்தால் நம்முடைய வீடும் நாடும் செழிக்கும்.

இந்த நன்னெறி நூல் பயிற்சி நிச்சயமாக நம் மாணவர்களிடையே கருத்துத் தெளிவையும், நல்ல பண்புகளையும் வளர்க்கும் என்று நம் முன்னோர்கள் சொல்லி இருக்கிறார்கள். படிப்பறிவை வளப்படுத்துவது அனுபவ அறிவே. அதனை யாவரும் பெற முயல்வோமாக. அனுபவம் பெற்றவர்களிடம் இருந்து கற்க முயல்வோமாக.

யாவரும் பண்பும், நலமும், பொருள் வளமும், ஆரோக்கியமும் பெற்று வாழ்வோமாக.

**ஆசீர்வாதங்கள்!**

**ஸ்ரீ சற்குருநாதன் துணை**



# பட்டினத்தார் பைந்தமிழ் - 9

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

பரமனருளை முழுமையாகப் பெற்ற பட்டினத்தார் சீர்காழியைப் பாடிப்பரவிய நூல்தான் கழுமலமும்மணிக் கோவை. முத்து, வைரம், பவளம் போன்ற மூவகை மணிகளைக் கோத்த வடத்தை (மாலை)ப் போல ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறை என்ற மூவகைப் பாவால் பாடப் பெற்ற நூல்தான் இது.

நூலின் தலைப்பிற்கேற்பப் பாவுக்குப் பத்துப் பத்தாக முப்பது பாடல்கள் பாடப்பட்ட இந்நூலில் 12 பாடல்களே கிடைத்துள்ளன. எஞ்சிய 18 பாடல்கள் கிடைக்கப் பெறவில்லை. இக்கருத்து நூலின் முதல்சீரும் 12ஆம் பாடலின் இறுதிச்சீரும் மண்டலித்து அந்தாதி வகையில் ஒத்துக் காணப்படாததால் உண்மை யெனத் தெரிகிறது.

சீர்காழிக்குரிய 12 பெயர்களில் கழுமலம் என்பதும் ஒன்று, அடியார்களுக்கான இறைவனது அருட்சீர், காழ்த்து (பழுத்து) விளங்குவதால் சீர்காழி எனப் பட்டது போல அடியார்களின் மும்மலங்களும் கழுவப்படும் இடம் கழுமலம் எனப்பட்டது. உடல் முழுவதிலும் உரோமத்தை (மயிரை) உடைய உரோமக முனிவரின் மும்மலங்களும் கழுவப்பட்டதால் கழுமலம் என்ற பெயர் அமைந்ததாய்ப் புராணம் கூறினாலும் பொதுவாக ஆன்மாக்களின் மலங்கள் கழுவப்படும் இடம் கழுமலம் ஆனது.

திருஞான சம்பந்தருக்குப் பாலமுதம் தந்த பார்வதி தேவியை இடப்பாகமாகக் கொண்டு ஊழிக் காலத்தும் ஆன்மாக்களுக்குப் பாதுகாப்பாக இருந்தருள் புரிபவர் சீர்காழிக் கழுமலநாதர் என்பதாகப் பட்டினத்தார் இந்நூற் பொருளைக் கூறியுள்ளார். இருப்பினும் ஒவ்வொரு பாடலிலும் ஓர் உன்னதம் புலப்படுமாறு பாடியுள்ளதைக் காண்போமாக!

செந்நிறமான பவளமலையில் படரும் பசுமையான பச்சை நிறக்கொடி போல் உமையம்மையை இடப்பாகம் கொண்டு அர்த்த நாரியாகத் திகழும் சிவபெருமான், திருஞான சம்பந்தருக்குப் பாலமுதம் ஊட்ட அருள் செய்த இடம் சீர்காழியாம் என்பது முதல் பாடலில் கருத்துச் சுருக்கமாகும்.

இச்சீர்காழியாம் கழுமலத்திற்குத் தோணிபுரம் என்ற பெயரும் உண்டு, அதற்கான காரணத்தைக் கூற வந்த பட்டினத்தார்,

*நாகர் நாடு மீமிசை மிதந்து*
*மீமிசை உலகம் கீழ்முதற் தாழ்ந்து இங்கு*
*ஒன்றா வந்த குன்றா வெள்ளத்து*
*உலகம் மூன்றுக்கும் களைகண் ஆகி, (கழுமல பாடல் 1 18-21)*

என்றார். கீழுலகம் மேலேயும் மேலுலகம் கீழேயும் இடமாறி விட்ட சூழலில் சுனாமி வெள்ளத்தால் ஒரே வெள்ளக் காடாக இருந்தபோது கீழ், நடு, மேல் ஆன மூவுலக உயிரினங்கட்கும் பாதுகாப்புக் கப்பலாக இருந்ததால் சீர்காழி தோணிபுரம் எனப்பட்டது. ஆக ஆன்மாக்கள் உய்ய, இச்சீர்காழியே புகலிடம் எனச் சுட்டிய கருத்து வேறோர் அடிப்படைக் கருத்தைச் சுட்டிக் காட்டக் கூறியதாக உணரலாம்.

புறநிலையில் ஆன்மாக்களுக்கு, அடைக்கலம் தரும் இந்தக் கழுமலத்தில் தான், அவதாரம் செய்த ஞானசம்பந்தப் பிள்ளையார் உமையம்மையின் பாலமுதம் உண்டு தேவாரம் பாடி மக்களை உய்விக்கச் செய்தார் என்ற குறிப்பில் பட்டினத்தார் கருத்தைக் கூறுகிறார்.

*தாதையொடு வந்த வேதியர் சிறுவன்*
*தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த*
*அன்னா யோஎன்று அழைப்ப முன்னின்று*
*ஞான போனகத்து அருள்அட்டிக் குழைத்த*
*ஆனாத் திரளை அவன்வயின் அருள (கழுமல பாடல் 1 23-27)*

இவ்வரிகள் திருஞானசம்பந்தரின் பாலமுது உண்ட வரலாற்றைக் கூறுகின்றன. மூன்று வயதுக் குழந்தை தந்தையோடு வந்ததாம், அப்படி வராமல் வீட்டிலேயே இருந்திருந்தால் ஞானப் பாலமுதுண்டு தேவாரம் தோற்றுவிக்க முடியாதன்றோ! அதனால்தான் ஒடு என்ற மூன்றாம் வேற்றுமைக்குரிய உருபுச் சொல் தந்தை என்ற உயர் பொருளோடு சேர்த்துக் கூறப்பட்டது.

அடுத்துத்தளர் நடைப் பருவம் என்றதால் ஓரளவு உணவை உட்கொள்ளும் பருவம் எனத்தெரிகிறது. இந்தக்குறிப்பின்படி தந்தையொடு வந்ததும் பசி பொறுக்க முடியாததால் குழந்தையாம் ஞானசம்பந்தர் அழ ஆரம்பித்துவிட்டார்.

பால் உண்ணும் பருவம் கடந்ததால் பசிக்குப் பால் கொடுக்காமல் பாற்சோறு கொடுக்காமல் பாற்சோறு கொடுக்கப்பட்டதாகப் பட்டினத்தார் அருள் அட்டிக்குழைத்த ஆனாத்திரளை அருள என்றார். திரள் என்றது சோற்றுத்திரளைக் குறிக்கும். பெரும்பாலும் ஞானசம்பந்தர் பால் குடித்தார் என்பதாகவே வழக்கில் மக்கள் கூறினாலும் பாற்சோறு உண்டார் எனப் பட்டினத்தார் கூறியது நுட்பமான கருத்தாகும்.

சேக்கிழார் இந்த நுட்பத்தைப்பாடுகிறார். கருணையே வடிவான சிவபெருமான், உமையம்மையிடம் குழந்தை அழுவதைக் காட்டியருளினார். அம்மையும் தன்மார்பிலிருந்து பாலைக் கிண்ணத்தில் கறந்து அப்படியே கொடுக்காமல், சிவஞானத்து இன் அமுதம் குழைத்து உண் அடிஇல் என ஊட்டினாராம், அடிசில் என்றால் உணவு, பாலாகிய உணவு என்று கருதினாலும் பாற்சோறு என்பதே கருத்தாகும். அமுதம் குழைத்த – என்றது சோற்றை அமுது எனக் கூறும் வழக்கத்தின்படிக் கூறப்பட்டதாகும்.

இப்படிச் சேக்கிழார் கூறுவதற்குத் திருஞானசம்பந்தரின் பாடலே அகச்சான்றாக உள்ளது. போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லாததைத் தாதையார் முனிவுறத் தானெனையாண்டவன். (பிரமபுரம் பதிகம் – 2)

இப்படிப் பாடியுள்ளதால்தான் கரையேறிய தந்தையார், குளக்கரையில் குழந்தைக்கு யாரேனும் பிரசாதமாகச் சோறு கொடுத்திருக்கக் கூடும் என்றதால் யாரளித்த பாலடிசில் எனக் கேட்டதாகச் சேக்கிழார் கூறினார். இந்த நுட்பங்களை யெல்லாம் நன்கு தேர்ந்து தெளிந்ததால் பட்டினத்தார் ஆனாத்திரள் எனப் பாற்சோற்றைக் கூறினார் என்பது பட்டினத்தாரின் நுண்மாண் நுழைபுலமைக்கான சான்று எனலாம்.

அடுத்து, பட்டினத்தார் சம்பந்தரின் வரலாற்றைக் கூறும் வகையில் மற்றும் ஒருபுதுமையைக் கூறியுள்ளார்.

*தோடுடைய செவியன் என்றும்*
*பீடு டைய பெம்மான் என்றும்*
*கையிற் சுட்டிக் காட்ட (கழுமல பாடல் 1 30-32 )*

என்ற பட்டினத்தாரின் வாக்கில் சம்பந்தரின் முதற்பாடலான தோடுடைய செவியன் என்ற பாட்டு, சிவனின் அடையாளத்தைச் காட்டும் அடையாளப் பாட்டன்றி, தோத்திரமாகக் கூறத்தகும் அற்புதப் பாடலன்று எனலாம். பெம்மான் இவன் என்றது – சிவனது அடையாளப் பதிகம் என்ற பெயர் பெற்றது என ஆன்றோர் கூறினர்.

ஆக, பட்டினத்தார் பிறர் சொல்லக் கேட்டதையோ தாமாக நினைத்ததையோ பாடாமல் இலக்கியச் சான்றுக்கான எடுத்துக்காட்டாகப் பாடினார் என்பதுதான் பட்டினத்தாரின் கழுமலப் பைந்தமிழ்ச்சுவை எனலாம்.

இதற்கு அற்புத அதிசயம் செய்த கழுமலவாணரைக் கைதொழுவார் தேவராவர் என்று கூறுகிறார். ஏனெனில் கழுமல ஈசன், எல்லா உலகங்களுக்கும் வினை முதற்காரணமானவனாய் விளங்குவதால் அவனைத் தொழவேண்டும் என்பது பட்டினத்தாரின் கருத்து ஆகும்.

அடுத்து, பட்டினத்தார் மனதைப் பற்றியுள்ள மாசுகளைக்

களைந்தால் இறைவன் தங்கும் இடமாக்கிக் கொள்ளலாம் என்பதை ஓர் உவமையால் விளக்கச் செருக்குற்ற மாலும் பிரம்மனும் சிவனது திருமுடியையும் திருவடியையும் காணாமல் வருந்திய புராணக்கதையைச் சுட்டினார்.

எல்லாத் தீங்கிற்கும் இச்சையாகிய காமமே அடிப்படைக் காரணம், காம இச்சையால் ஐம் பொறிகளைக் கட்டுப் படுத்த முடியாதென்பதால் ஒவ்வோர் புலன் வழியும் மனத்தில் மாசுபடிகின்றது. ஆதலால் சிவனருள் என்னும் துணையால் துன்பச் சுவைகளைந்து பேரன்பினால் தூய்மை செய்து திருவருளாகிய விளக்கேற்றினால் இறைவன் அத்தகு அன்பர்களின் நெஞ்சைப் பள்ளியறையாகக் கருதிவந்து தங்குவான் என்கிறார்.

அங்ஙனமின்றிச் சிவனைக்காண அலைந்து திரிந்து காணாத நிலையில் உலகில் ஏற்பட்ட பிரளயத்தில் மாலும் பிரமனும் கரைசேரத் தோணியாகத் தென்பட்டவரே தோணியப்பராம் சீர்காழி வாணர் என்றும் அவ்வாணர், மலைமகளை இடப்பாகம் கொண்டவராய்ச் சீர்காழியில் எழுந்தருளியுள்ளார் என்றும் கூறி அத்தகையோரே தன் உள்ளத்தில் ஒளியாகக் காட்சியருள்கிறார் எனப் பட்டினத்தார் ஆராதனை செய்கிறார்.

*வெள்ளத்தே தோன்றிக் கழுமலத்தே வீற்றிருந்தென்*
*உள்ளத்தே நின்ற ஒளி.*
*என்பது பட்டினத்தார் வாக்கு! (பாடல் 5)*

இத்தகு அருள் ஒளியாக இருக்கும் காழிவாணரே தனக்கு உயிர்போம் காலத்து எளிவந்த கருணையாளனாக வந்து காட்சி தருவான் என ப்பட்டினத்தார் கடைசார் அமையத்து எளிவந்தவா என்று கூறி வியப்படைகின்றார்.

*(தொடரும்...)*

## திருவாசகம் - அதிசயப்பத்து காட்டும் பக்தி நெறிகள்

த.ரா.குருமூர்த்தி, பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் என்னும் தெய்வீக வாசகத்தின் இருபத்து ஆறாவது பதிகம் அதிசயப்பத்து ஆகும். இதில் பத்துப் பாடல்கள் அடங்கியுள்ளன. இறைவனின் எண்ணம் இல்லாத எனக்கு, இறையருள் கிட்டிய அதிசயத்தையும், அடியார்களோடு இணைந்ததையும் பாடல்களில் சுட்டிக்காட்டுகின்ற. மாணிக்கவாசகர் சிவபெருமானது நினைப்பும் உருக்கமும் இல்லாது எப்படியிருந்திருக்க முடியும் வாய்ப்புண்டோ? இல்லை. நாம் இறைவனைப் பற்றிய நினைப்பில் என்றுமே இருக்க வேண்டும். அதன் விளைவாக நமக்கு இறையருள் கிட்டும் என்பதை மாணிக்கவாசகரின் அதிசயப்பத்திலிருந்து நாம் தெரிந்துகொள்ளலாம். ஞானமும், கல்வியும் ஒவ்வொரு மனிதருக்கும் வாழ்வின் மேன்மைக்கு அடிப்படை அம்சமாக இருக்கின்றன. நமச்சிவாயவே, ஞானமும் கல்வியும் எனத் திருநாவுக்கரசர் அருளியுள்ளார். எனவே இறைவனின் திருவடிகள் ஞானத்தையும் கல்வியையும் அருளும் என்பது சைவநெறியின் நம்பிக்கையாகும். இறைவனின் அருளாற்றல் அதிசயப்பத்துப் பதிகத்திலே அறிந்துகொள்ள முடிகின்றது. மாணிக்கவாசகர் தம்மீதுள்ள குறைகளைச் சுட்டிக்காட்டி, இக்குறைகள் இருந்தும் இறைவன் என்னை ஆண்டு, அருளி அடியார்கள் கூட்டத்தில் சேர்த்தார் என்பதை ஒவ்வொரு பாடலிலும் தெரிவிக்கின்றார். மாணிக்கவாசகர் சுட்டிக்காட்டிய குறைகள் மனிதர்களிடத்தில் இருக்கக்கூடாது என்பது இப்பாடல்களிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

**எண்ணிலேன் திருநாம அஞ்செழுத்தும்
என் ஏழைமை அதனாலே
நண்ணிலேன் கலைஞானிகள் தம்மொடு
நல்வினை நயவாதே
மண்ணிலே பிறந்து இறந்து மண்ணாவதற்கு
ஒருமைப்படுகின்றேனை.**

எனது அறியாமையினால் நமசிவாய என்கிற ஐந்தெழுத்து பஞ்சாட்சர மந்திரத்தை எண்ணிப்பார்க்கவே இல்லை. கற்றிந்தவர்களுடன்

சேர்ந்திடவில்லை. நல்வினைகளை ஆற்றவும் இல்லை. இத்தகையோனை இறைவன் ஆண்டுகொண்டு தனது அடியார்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொண்டது அதிசயமே என மாணிக்கவாசகர் எடுத்துரைக்கின்றார். எவ்வித நல்வினைகளையும் செய்யாது மண்ணிலே பிறந்து இறந்து மண்ணாகிப்போக நினைப்பவனை இறைவன் ஆட்கொண்டது அதிசயமே என்பது மாணிக்கவாசகர் கருத்தாகும்.

இப்பாடல் நமக்காக நம்முள் பக்திநெறி தழைக்க வேண்டுமென்பதற்காக மாணிக்கவாசகரால் அருளப்பெற்றுள்ளது. நமசிவாய என்கிற திருஐந்தெழுத்து மந்திரம் நம்நாவில் தங்கி ஒலிக்க வேண்டும். அவ்வாறு நமசிவாய என்று தொடர்ந்து உச்சரிப்பதன் பயன் கலைஞானிகளின் தொடர்பு கிட்டும். அதன் பயனாக நல்வினைகளை நம்மால் ஆற்ற முடியும். அதன் விளைவாக இறையருள் கிட்டும் என்பது புரிந்து கொள்ளப்பட வேண்டியதொன்றாகும். நமசிவாயவே ஞானமும் கல்வியும் எனப்படுகின்றபோது அதைத்தொடர்ந்து கடைப் பிடிப்பவர்களுக்குக் கலைஞானிகளின் தொடர்பும், ஞானப்பரிமாற்றமும் கிடைக்கத்தானே செய்யும் என திருஐந்தெழுந்து மந்திரத்தின் சிறப்பினை மாணிக்கவாசகர் அதிசயப்பத்துப் பதிகத்தில் பதிவு செய்துள்ளார். இக்கருத்தினையே திருநாவுக்கரசர், படைக்கலமாக உன்நாமத்து எழுத்து அஞ்சு என்நாவில் கொண்டேன் எனத் தெரிவிக்கின்றார். திருஐந்தெழுத்து மந்திரம் வாழ்வின் பாதுகாப்புக் கேடயம் எனத் திருநாவுக்கரசர் அறிவுறுத்துகின்றார்.

**நீதி யாவன யாவையும் நினைக்கிலேன்**
**நினைப்பவரொடுங் கூடேன்**
**ஏதமே பிறந்து இறந்து உழல்வேன் தன்னை**

வாழ்வில் எவையெல்லாம் நீதிநெறிகள் என்பது பற்றி நினைக்கவே இல்லை. நீதிநெறிகள் அறிந்தவர்களுடன் சேரவே இல்லை. இந்த மண்ணில் ஏதோவெனப் பிறந்து வாழ்ந்து துன்பப்படுபவனை இறைவன் ஆட்கொண்டு தனது அடியார்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொண்டார் என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார்.

இப்பாடல் நமக்குச் சொல்லும் கருத்து என்ன? வாழ்விற்குரிய நல்வழி, நன்னெறி, நீதிநெறி, மூதுரை ஆகியவற்றை ஒவ்வொரு மனிதரும் கடைப்பிடிக்க வேண்டும் நீதிநெறிகள் அறிந்த பெரியோர்களுடன் சேர்ந்திருக்க வேண்டும். இதனால் வாழ்வில் நலமும் வளமும் பெருகும். ஆணவம், மாயை, கன்மம் என்கின்ற மூன்று மலங்களிலிருந்து விலகி வாழ்கின்ற நீதிநெறிகளைச் சைவநெறி அறிவுறுத்துகின்றது. நாம் எழுந்து நிற்பது என்பது எந்த இடத்திலிருந்து எழுந்து நிற்கிறோம் என்பதைப் பொறுத்து அமையும். அது போலவே நீதிநெறியின்கண் அமைந்த வாழ்வு நல்லதாகவே அமையும். இக்கருத்தினைத் திருஞானசம்பந்தர்

நீதியால் வாழ்கிலை நாள்செலா நின்றன
நித்தம் நோய்கள்

எனத் தெரிவிக்கின்றார். நீதிநெறியில் வாழாது நாட்கள் நில்லாது சென்று கொண்டே இருந்தால், நித்தமும் நோய்கள் ஏற்படும் என்பது திருஞானசம்பந்தரின் கருத்தாகும். எனவே நீதிநெறிகளும் அதனை ஒட்டிய வாழ்வும் மனித வாழ்விற்கு அனைத்து நோய்களிலிருந்து விடுபடுவதற்கு அவசியத் தேவையாகின்றது.

பரவுவார் அவர்பாடு சென்றணைகிலேன்
பன்மலர் பறித்து ஏத்தேன்
குரவுவார் குழலார் திறத்தேநின்று குடிகெடுகின்றேனை
பித்தன் என்றுஎனை உலகவர் பகர்வதோர்
ஒத்துச் சென்று தன்திருவருள் கூடிடும் உபாயமது அறியாமே

இறைவனை நினைந்துருகித் தொழும் அடியார்களுடன் சேரவில்லை. பல்வேறு மலர்கள் பறித்து இறைவனது திருவடியில் பணிந்து வணங்கிச் சேர்த்திடவில்லை. குரவு மலரணிந்த நீண்ட கூந்தல் கொண்ட மாதருடனேயே குலவி இருந்து வாழ்விற்குத் துன்பம் தேடிக்கொள்வேனை இறைவன் ஆட்கொண்டார், இது அதிசயமே என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார். சிவனடியார்களோடு இணைந்து சென்று, இறையருள் பெற்றிடும் வழிமுறையினை நான் அறியாது இருக்கின்றபடியால் எனைப் பித்தன் என உலகத்தவர் கூறுகின்றார்கள் எனத் தெரிவிக்கின்றார்.

இறைவனை நினைந்துருகும் அடியார்களுடன் நாம் சேர்ந்திருப்பது சாலச்சிறந்தது. பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து நிற்கும் இறைவனது திருவருள் பெறத் திருவழியாக அமையும். மலர்கள் பறித்துத் தொடுத்து அவற்றை இறைவனது திருவடியில் சேர்த்து மனம் உருகித் தொழ வேண்டும். அடியார்களோடு சேர்ந்திருக்கின்ற போது சிவநெறியின் சித்தாந்தம் தெரியவருகின்றது. துன்பவினை எது என்பதனை உணர முடியும். அதிலிருந்து விலகிட முடியும். நல்லதோர் நல்வினைகளை நித்தமும் செய்திட முடியும்.

வைப்பு மாடென்றும் மாணிக்கத் தொளியென்றும்
மனத்திடை உருகாதே
உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர்
எழுதரு நாற்றம் போல்
பற்றல் ஆவதோர் நிலையிலாப் பரம்பொருள்
அப்பொருள் பாராதே

இறைவனை வைப்புநிதி என்றும் மாணிக்கத்தொளி என்றும் எண்ணாது இருந்தேன். இந்த உடம்பில் குடிகொண்டுள்ள பரம் பொருளினை உணராது இருந்தேன், மலரில் குடிகொண்டுள்ள வாசனை போல் என்உடலில் குடிகொண்டுள்ள பரம்பொருள் என்னும் உறுபொருளை, உணராது இருக்கின்றேன். சிவநெறித் தத்துவம் இறைவனைப் பற்றிட உதவும். அடக்கம் அமரருள் உய்க்கும் என்பது போல, புலனடக்கம், ஆணவ, மாயை, கன்மம் அடக்கம் இறைவனைப் பற்றிட உதவும்.

இறைவன் நமது மிகப்பெரிய செல்வம் என்பதை நாம் உணர்ந்திட வேண்டும். வாழ்வினை மேம்படுத்தும் ஞானதீபம் இறையருளால் கிட்டும் என்பதை உணர்ந்திட வேண்டும். ஒவ்வொரு மனிதரது உள்ளத்திலும் இறைவன் இருக்கிறார் என்பது ஒவ்வொருவராலும் உணரப்படவேண்டும். திருமூலர் உணர்த்துகின்ற.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலன்ஐந்தும் காளா மணிவிளக்கே.

என்பது ஒவ்வொருவராலும் உணரப்பட வேண்டும். இறைவனை உள்ளம் உருகித் தொழுது நிற்கின்ற போது எச்செய்வினையும் நம்மைத் தீண்டாது என்பதை

கைவினை செய்து எம்பிரான் கழல்போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்துஎமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்

எனத் திருஞானசம்பந்தர் அருளியுள்ளார். நன்றுடையான், தீயது இல்லான் எனத் திருஞானசம்பந்தர் இறைவனைப் பாடியுள்ளார். தீதிலா நன்மை திருவருட்குன்றே என மாணிக்கவாசகர் பாடியுள்ளார்.

**ஈசனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்**
**எங்கு எழுந்த அருளுவது இனியே**

என மாணிக்கவாசகர் சொல்வது போல, இறைவனைத் தொழுது நிற்க வேண்டும்.

**பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்**
**போகமும் திருவும் புணர்ப்பானைப்**
**பின்னை என்பிழையைப் பொறுப்பானைப்**
**பிழையெலாம் தவிரப் பணிப்பானை**

என, சுந்தரமூர்த்தி நாயனார், இறைவனின் மேன்மையினைத் தமது பாடலில் தெரிவிக்கின்றார்.

**ஆதியும் அறிவுமாகி அறிவினுள் செறிவுமாகிச்**
**சோதியுள் சுடருமாகித் தூநெறிக்கு ஒருவனாகி**

என இறைவனின் பெருமைகளைத் திருநாவுக்கரசர் தெரிவிக்கின்றார்.

அன்றலர்ந்த மலர்கள் பறித்து நகமெலாம் தேயத் தொடுத்து இறைவன் திருவடியில் சமர்ப்பித்து நீயலாது ஓர் துணை இல்லை என்று முகமெலாம் கண்ணீர் மல்க இறைவன்முன் உருகி நின்றுதொழும் தொண்டனின் அகமே இறைவனுக்குக் கோயில் என்பதை அப்பர் கீழ்க்காணும் பாடலில் விளக்கியுள்ளார்.

சகமலாது அடிமைஇல்லை தானலால் துணையும்இல்லை
நகமெலாம் தேயக்கையால் நாள்மலர் தொழுதுதூவி
முகமெலாம் கண்ணீர்மல்க முன்பணிந்து ஏத்தும்தொண்டர்
அகமலால் கோயில்இல்லை ஐயன் ஐயாறனார்க்கே.

உடலினை உண்மை, நிரந்தரம், பெரிய பொக்கிஷம் எனக்கருதியிருந்தேன். அதனால் துன்பக்கடலில் மூழ்கிச்

சிரமப்பட்டிருந்தேன். உடல் என்பது உள்ளே இருள் சூழ்ந்த வல்வினைகளைச் செய்கின்ற சிறியகுடில், இதனை மிக முக்கியப் பொருளாகக் கருதி மகிழ்ந்திருந்தேன். இதனால் நரகத்திடைப்புகும் நிலை எனக்கு ஏற்பட்டிருந்தும் இறைவன் எனை ஆட்கொண்டது அதிசயமே என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார். உடல் என்பது பொய்க்கூரை, ஊன்சுவர், இருள்சூழ் குடில், இது மெய்யன்று என மாணிக்கவாசகர் கீழ்க்காணும் பாடலில் தெரிவிக்கின்றார்.

**பொத்தை ஊன்சுவர் புழப்பொதிந்து**
**உளத்து அகம்பொழிகிய பொய்க்கூரை**
**இத்தை மெய்எனக்கருதி நின்று**
**இடர்கடற் சுழித்தலைப் படுவேனை**
**இருள் திணிந்து எழுந்திட்டதோர்**
**வல்வினைச் சிறுகுடில் இது இத்தைப்**
**பொருள் எனக்களித்து அருநரகத்திடை**
**விழப்புகுகின்றேனை**

உள்ளத்தில் இறைவன் குடிகொள்ளும் அளவிற்கு நாம் நமது வாழ்வினை அமைத்துக்கொள்ள வேண்டும் என்பது மாணிக்கவாசகரின் பாடலிலிருந்து நமக்குப் புரிகின்றது. உடல்நலம் பேண வேண்டும். அதுவே வாழ்வு என்று இருக்கக்கூடாது. மனநலமும் உடல்நலத்திற்கு உதவிடும். இறைவன் குடிகொள்ளும் அளவிற்கு உள்ளத்தை வளர்த்தால், ஊன்உடம்பு தூய ஆலயமாகிவிடும். வெந்துவிழும் உடற்பிறவி மெய்யென்று கருதி வினைகளைப் பெருக்கிக் கொள்ளக் கூடாது என மாணிக்கவாசகர் அறிவுறுத்துகின்றார். மாணிக்கவாசகரின் அதிசயப்பத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பத்துப்பாடல்களின் உண்மைப் பொருளினை உணர்கின்ற ஒவ்வொருவருக்கும் வியந்து போற்றுகின்ற, வாழ்வினை வளப்படுத்துகின்ற, மெய்ஞ்ஞான நெறி அறிகின்ற அதிசயங்கள் நடக்கக் கூடும்.



# வள்ளலார் என்னும் பேரொளி

(புலவர் ஆறு.மெய்யாண்டவர்)

அருட்பெருஞ் சோதி தனிப்பெருங்கருணை
அருட்பெருஞ் சோதி அருட்பெருஞ் சோதி

பத்தொன்பதாம் நூற்றாண்டு பாரதமண்ணுக்குப் பல புதுமைகளையும் மேன்மைகளையும் மக்களுக்கு வழங்கிய மகான்களை ஈன்றது. வடக்கே இராமகிருஷ்ண பரமஹம்சரும், விவேகாநந்தரும் ஆன்மீகத்தடத்தைப் புதிய பார்வையில் பார்க்க வைத்தார்கள். அதே வேளையில் தெற்கே ஒரு புதிய விடி வெள்ளி வள்ளலார் எனும் பெயரில் சிதம்பரத்தை அடுத்த மருதூரில் கடலூர் மாவட்டத்தில் தோன்றியது. இராமையா சின்னம்மை அருந்தவத்தால் ஈன்ற பேரொளி, அந்த ஒளிதான் இராமலிங்க அடிகளார் எனும் திருவருட் பிரகாசவள்ளலார்.

மக்களைத் தங்கள் கண்களை மூடி ஒவ்வொருவருக்கும் உள்ளே இருக்கிற இறைவனை உள்முகமாகத் தேடிப் பயணிக்க வைத்தவர் வள்ளலார்; சிறு தெய்வ வழிபாடுகளும் உயிர்ப்பலி பூசைகளும் தெய்வத்தின் அருளைப் பெற்றுத்தராது என்று ஆரவாரமின்றி உறுதிபட உரைத்தவர் வள்ளலார்.

நம்மிடையே காணும் அனைத்து மகிழ்ச்சிகளுக்கும் அன்புதான் அடிப்படை; நம்மிடையே உருவாகும் மோதலும், பகைமையும், பிரிவினைகளும் அந்த அன்பு இல்லாமையின் விளைவுகளே; அதனால்தான்.

அன் பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே
அன் பெனும் வலைக்குட்படு பரம்பொருளே
அன் பெனும் கரத்தமர் அமுதே
அன் பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன் பெனும் உயிர் ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே
அன்புருவாம் பரசிவமே

என்று கூறி அன்பெனும் உயிர்க் கருணையே இறைவழிபாடு என்பதை

உலகினர்க்குத் தெளிவுபடுத்தினார், வள்ளுவப்பெருந் தகையும் அன்பின் வழியது உயிர்நிலை எனக் கூறியுள்ளார், வள்ளலார் நிறைநிலையில் மனந்தெளிந்து உரைத்தது ஆறாந் திருமுறை. அதில் ஞான சரியை எனும் தலைப்பில் அன்பின் ஊற்றை உரைக்கும் பாங்கு எண்ணி எண்ணி மகிழத்தக்கது

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழுங் கண்ணீர் அதனால்
உடம்பு நனைந்து நனைந்து அருளமுதே நன்னிதியேஞான
நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம் வம்மின் உலகியலீர்,

என்று அன்பின் பெருக்கைத் தெளிவுபடுத்துகிறார்.

இந்த அன்பின் பெருக்குத்தனிப்பெரும் உயிர்க்கருணையாய் விளங்குகிறது; விரிகிறது. அருட் பெருஞ்சோதியாம் பேரொளிப்பிழம்பை வழிபடுவது என்பது உயிர்கள் மாட்டுக் கொண்ட தனிப் பெருங்கருணையே உயிர்க் கருணை தான் என வலியுறுத்துகிறார்.

அப்பா நான் வேண்டுதல் கேட்டருள்புரிதல் வேண்டும்.
ஆருயிர்கட்கொல்லாம் நாம் அன்பு செயல் வேண்டும்.

என மேலும் உலகிலுள்ள அனைத்துயிர்களிடமும் அன்பு செலுத்த வேண்டும் தனிப்பெருங் கருணையே அருட்பெருஞ் சோதி வழிபாடு என்பதை உணர்ந்தோம்.

*(தொடர்வோம்...)*



## திருக்குறள் தெளவுரை

(ம. கார்மேகம்)

### தீவினை அச்சம்

### (தீயசெயல்களைச் செய்வதற்கு அஞ்சுதல்)

1. **தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்**
   **தீவினை என்னும் செருக்கு.**

தீவினையார் - தீயசெயல்களைச் செய்பவர்கள்; அஞ்சார் - அஞ்சமாட்டார்கள்; விழுமியார் அஞ்சுவார்– பெருமை நிறைந்தவர்கள் அஞ்சுவார்கள்; தீவினை என்னும் செருக்கு - தீய செயல் என்னும் குற்றத்திற்கு.

தீய செயல்களைச் செய்பவர்கள் தீய செயல் என்னும் குற்றத்தைச் செய்ய அஞ்சமாட்டார்கள்; பெருமை நிறைந்தவர்கள் அஞ்சுவார்கள்.

2. **தீயவை தீய பயத்தலான் தீயவை**
   **தீயினும் அஞ்சப் படும்.**

தீயவை - தீயசெயல்கள்; தீய பயத்தலான் - தீமையையே தருவதால்; தீயவை - அத்தீய செயல்கள்; தீயினும் அஞ்சப்படும் - தீயைவிட அச்சத்திற் குரியனவாகும்.

ஒருவன் செய்யும் தீயசெயல்கள் அவனுக்குத் திமையையே தருவதால் அத்தீய செயல்கள் தீயைவிட அச்சத்திற் குரியனவாகும்.

3. **அறிவினுள் எல்லாம் தலைஎன்ப தீய**
   **செறுவார்க்கும் செய்யா விடல்.**

அறிவினுள் எல்லாம் - தான் அறியும் அறிவுகள் எல்லாவற்றிலும்; தலைஎன்ப - முதன்மையானது என்று சொல்லுவார்கள்; தீய – தீய செயல்களை; செய்வார்க்கும் – தன்னுடன் பகை கொண்டாருக்கும்; செய்யா விடல் – செய்யாது விடுதல்.

தன்னுடன் பகை கொண்டாருக்கும் தீய செயல்களைச் செய்யாது விடுதல், தான் அறியும் அறிவுகள் எல்லாவற்றிலும் முதன்மையான செயல் என்று சொல்லுவார்கள்.

4. **மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்**
**அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு.**

மறந்தும் - மறந்துகூட; பிறன்கேடு - பிறன் ஒருவனுக்குத் தீங்கு செய்ய; சூழற்க - நினைக்கக் கூடாது; சூழின் - அவ்வாறு நினைத்தால்; அறம் சூழும் - அறம் ஆகிய கடவுள் நினைக்கும்; சூழ்ந்தவன் கேடு - தீங்கு நினைத்தவனுக்குத் தீங்கு;

பிறன் ஒருவனுக்குத் தீங்கு செய்ய நினைக்கக் கூடாது; அவ்வாறு நினைத்தால் தீங்கு நினைத்தவனுக்கு அறக்கடவுள் தீங்கு செய்ய நினைக்கும்.

5. **இலன் என்று தீயவை செய்யற்க செய்யின்**
**இலன் ஆகும் மற்றும் பெயர்த்து.**

இலன் என்று - வறியவன் எனக் கருதி; தீயவை செய்யற்க - தீய செயல்களைச் செய்யக் கூடாது; செய்யின் - செய்தால்; இலன் ஆகும் மற்றும் பெயர்த்து - மீண்டும் அவன் வறியன் ஆவான்.

தான் வறியவன் எனக் கருதித் தீய செயல்களைச் செய்யக் கூடாது; அவ்வாறு செய்தால் மீண்டும் அவன் வறியவன் ஆவான்.

6. **தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால**
**தன்னை அடல்வேண்டா தான்.**

தீப்பால - தீமை தருகின்ற செயல்களை; தான்பிறர்கண் - ஒருவன் பிறரிடத்து; செய்யற்க - செய்யக் கூடாது; நோய்ப்பால - துன்பம் தருகின்றவை; தன்னை அடல் வேண்டாதான் - தன்னைத் துன்புறுத்த விரும்பாதவன்;

துன்பம் தருகின்ற தீமைகள் தன்னைத் துன்புறுத்த விரும்பாதவன் தீமை தருகின்ற செயல்களைப் பிறரிடத்துச் செய்யக் கூடாது.

7. **எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை**
**வீயாது பின்சென்று அடும்.**

எனைப்பகை - எந்த விதமான பகையாயினும்; உற்றாரும் - அதனை உடையவர்களும்; உய்வர் - தப்பித்துக் கொள்வர்; வினைப்பகை - தீவினையாகிய பகை; வீயாது - நீங்காமல்; பின்சென்று அடும் - தொடர்ந்து பின்சென்று கொல்லும்.

எந்த விதமான பகையாயினும் அதனை உடையவர்கள் தப்பித்துக் கொள்வர். ஆனால் தீவினையாகிய பகை நீங்காமல் தொடர்ந்து பின் சென்று கொல்லும்.

**8. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை**
**வீயாது அடிஉறைந் தற்று.**

தீயவை செய்தார் கெடுதல் – பிறருக்குத் தீங்குகள் செய்பவர்கள் கெடுதல்; நிழல்தன்னை வீயாது – ஒருவனது நிழல் அவனை நீங்காமல்; அடி உறைந்தற்று – காலடியின்கண் தங்கும் தன்மை போன்றது.

ஒருவனது நிழல் அவனை நீங்காமல் அவனது காலடியில் தங்குவது போன்று, பிறர்க்குத் தீங்குகள் செய்பவர்களுக்குக் கெடுதல் சேரும் என்பது உறுதியாகும்.

**9. தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்து ஒன்றும்**
**துன்னற்க தீவினைப் பால்.**

தன்னைத்தான் – ஒருவன் தன்னைத் தானே; காதலன் ஆயின் – அன்புடையவனாக அமைந்தால்; எனைத்து ஒன்றும் – எந்த ஒன்றும்; துன்னற்க – செய்யக் கூடாது; தீவினைப் பால – தீங்கு தரும் செயல்களை;

ஒருவன் தனக்குத் தானே அன்புடையவனாக அமைந்தால் பிறர்க்குத் தீங்குதரும் செயல்களை எந்த ஒன்றினாலும் செய்யக் கூடாது.

**10. அருங்கேடன் என்பது அறிக மருங்குஓடித்**
**தீவினை செய்யான் எனின்.**

அருங்கேடன் என்பது அறிக – அரிதாகக் கேட்டினை உடையவன் என்று அறிக; மருங்குஓடி – பலவகையிலும் முயன்று சென்று; தீவினை – தீய செயல்களை; செய்யான் எனின் – செய்யாதவன் என்றால்.

பலவகையிலும் முயன்று சென்று பிறர்க்குத் தீய செயல்களைச் செய்யாதவன் என்றால் அவன் அரிதாகக் கேட்டினை உடையவன் என்று அறிய வேண்டும். அவனுக்குக் கேடு அரிதாகும்.

# மடாலய நிகழ்வுகள்

**தாலாட்டுப் பாடல் படப்பிடிப்பு**

17.06.2017 அன்று கோவிலூர் மடாலயத்தில் தாலாட்டுப் பாடல் படப்பிடிப்பு நடைபெற்றது. தமிழ்நாட்டில் தாலாட்டுப் பாடல் முன்பு பெருமளவில் பாடப்பட்டு வந்தது. குறிப்பாக செட்டிநாட்டுப் பகுதியில் தாலாட்டுக்கள் தமிழ்நயத்தோடும் பண்பாட்டை விளக்கும் வகையிலும் உணர்வுப்பூர்வமாகப் பாடப்பட்டு வந்தது. ஆனால் இன்று மாறிவரும் உலகச் சூழலில் தாலாட்டுப் பாடல்கள் அதிகம் பாடப்படுவதில்லை. எனவே இவை அழிந்துவிடாமல் ஆவணப்படுத்தும் முயற்சியில் கோவிலூர் மடாலயம் ஈடுபட்டுள்ளது. இத்தாலாட்டுப் படப்பிடிப்பினைக் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தொடங்கி வைத்தார். மடாலய மக்கள் தொடர்பு அலுவலர் டாக்டர் குமரப்பன், நபார்டு வங்கி கண்ணப்பன், தகவல் ஊடகவியல் துறைத்தலைவர் ராமசாமி ஆகியோர் படப்பிடிப்பிற்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். செட்டிநாட்டுப் பகுதியைப் பூர்வீகமாகக் கொண்டு தற்போது மதுரை, திருச்சி, கோவை, சென்னை பகுதிகளில் வசித்து வருபவர்கள் பலர் தாலாட்டுப் பாடினர். 45 முதல் 81 வயது முடிய உள்ள 20 பேர் தாலாட்டுப் பாடினர். ஆண்களும் தாலாட்டுப் பாடினர். நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி விஸ்காம் மாணவர்கள் படப்பிடிப்பைச் செய்தனர்.

**கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியில் முதலாம் ஆண்டு துவக்க விழா**

19.06.2017 அன்று கோலூரில் உள்ள கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியின் முதலாம் ஆண்டு வகுப்புகள் துவக்க விழா கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. கல்லூரி முதல்வர் டாக்டர் ரவீந்திரன் வரவேற்றார். தேவகோட்டை ஸ்ரீசேவுகன் அண்ணாமலை கல்லூரி முதல்வர் டாக்டர் சந்திரமோகன் முதலாம் ஆண்டு வகுப்புகளைத் தொடங்கி வைத்து உரையாற்றினார். பேரா.விமலாதேவி நன்றி கூறினார். மடாலய கல்வி

நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் மடாலய கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர் செல்லப்பா, மாயாண்டி, திருமதி.மணிமொழிமோகன், திருமதி.மணிமொழி முருகன் மற்றும் பெற்றோர், ஆசிரியர்கள் பங்குபெற்றனர்.

23.06.2017 அன்று கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் முதலாம் ஆண்டு வகுப்புகள் துவக்க விழா கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் மாயாண்டி வரவேற்றார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் சே.குமரப்பன் சிறப்புரை ஆற்றினார். மாணவர்களுக்குக் கல்லூரி ஆசிரியர்கள் அறிமுகப்படுத்தி வைக்கப்பட்டனர். மாணவர்களுக்குச் சீருடைகளையும் கற்கும் சாதனங்களையும் கோவிலூர் ஆதீனம் வழங்கினார். பேரா. விஜயலட்சுமி நன்றி கூறினார்.

கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் நாட்டு நலப்பணித்திட்டம் சார்பில் 21.06.2017 அன்று உலக யோகா தினம் கொண்டாடப் பெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. முதல்வர் டாக்டர் செல்லப்பா வரவேற்றார். மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். உடற்கல்வி துறைத் தலைவர் டாக்டர் விஸ்வலிங்கம் யோகா தின உரை ஆற்றினார். திட்ட அலுவலர் பேரா.ஜெயராஜ் நன்றி கூறினார்.

கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் நாட்டு நலப்பணித்திட்டம் சார்பில் 21.06.2017 அன்று உலக யோகா தினம் கொண்டாடப் பெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. முதல்வர் மாயாண்டி வரவேற்றார். மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். உடற்கல்வி ஆசிரியர் சசிகுமார் தலைமையில் மாணவர்கள் யோகா பயிற்சி செய்தனர். திட்ட அலுவலர் பேரா.கருப்பையா நன்றி கூறினார்.

24.06.2017 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் பொற்கிழிக் கவிஞர் நல்லாசிரியர் கா.நாகப்பன், பெரியபுராணத்தில் கணநாதர் மற்றும் கூற்றுவ நாயனார் குறித்து இலக்கியப் பேருரை ஆற்றினார்.

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் இளங்கலை முதலாம் ஆண்டு வகுப்புகள் தொடக்கவிழா 03.07.2017 அன்று கோவிலூர் ஆதீனம் ஸ்ரீ ல ஸ்ரீ மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. கல்லூரி முதல்வர் முனைவர் செல்லப்பா வரவேற்புரை ஆற்றினார். காரைக்குடி KIT & KIM பொறியியல் கல்லூரி இயக்குநர் முனைவர்.அண்ணாமலை முதலாண்டு வகுப்புகளைத் தொடங்கி வைத்துச் சிறப்புரையாற்றினார். மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் முனைவர். சே.குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். வணிகவியல் துறைத் தலைவர் பேரா.சீதாலட்சுமி சிறப்பு விருந்தினர் அறிமுக உரையாற்றினார். மடாலய கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் மாயாண்டி, முனைவர் ரவீந்திரன், மணிமொழி மோகன், மணிமொழி முருகன் மற்றும் துறைத் தலைவர்கள், மாணவர்கள், மடாலய ஊழியர்கள், பெற்றோர்கள் கலந்து கொண்டனர். கணினியியல் துறைத் தலைவர் முனைவர் கலா நன்றியுரையாற்றினார்.

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் சார்பாக 10.07.2017 அன்று சிறப்புக் கூட்டம் சீர்வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள் ஆசியுரையுடன் நடைபெற்றது. டாக்டர் குமரப்பன் வரவேற்புரை வழங்கினார். சிங்கப்பூர் அரசின் பல்வேறு துறைகளின் ஆலோசகர் டாக்டர் இராம.கருணா நிதி சிறப்புச் சொற்பொழிவாற்றினார். பேரா. டாக்டர் K.கலா நன்றி கூறினார்.

**கோவிலூர் மடாலயத்தில் நூல் வெளியீட்டு விழா**

11.07.2017 அன்று மாணவர்கள் படிக்கும் வகையில் தேர்ந்தெடுக்கப்பட்ட திருமந்திரப் பாடல்களுக்கு எளிய உரையில்

அமைந்த மாணவர்களுக்கான திருமந்திர உரைநூல் புத்தக வெளியீட்டு விழா கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் வரவேற்றார். சிங்கப்பூர் தேசியப் பல்கலைக்கழகப் பேராசிரியரும் சிங்கப்பூர் ஜனாதிபதி எஸ்.ஆர்.நாதனுக்கு தமிழ் கற்றுக் கொடுத்தவருமான டாக்டர். சுப.திண்ணப்பன் நூலைப் பெற்றுக்கொண்டார். நூல் உரை ஆசிரியர் டாக்டர் கரு.முத்தையா உரை ஆற்றினார். இதனைத் தொடர்ந்து சிங்கபூரில் உள்ள கல்வி முறை குறித்த கலந்துரையாடல் நடைபெற்றது. இக்கலந்துரையாடலில் பல்வேறு வினாக்களுக்குப் பதிலளித்த டாக்டர் சுப.திண்ணப்பன் பேசுகையில் சிங்கப்பூரில் தரத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்படும் பாடத்திட்டங்களில் பொருளடக்கத்திற்கு முக்கியமில்லை. வாழ்க்கை நடைமுறைக்கு ஏற்ற வகையில் உருவாக்க முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. நம் நாட்டில் திருக்குறள், கம்பராமாயணப் பாடல்களை மனப்பாடம் செய்து எழுத வேண்டியதில்லை. சொந்தமாக எழுத வேண்டும். மேலும் அனைவருக்கும் சரளமாக ஆங்கிலம் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டும். அப்பொழுது தான் உலக நிகழ்வுகளை அறிந்து கொண்டு முன்னேற முடியும். இந்தியாவில் படித்த பெரும்பாலாரிடம் ஆங்கிலப் புலமை குறைவாக உள்ளது. இந்தியப் பல்கலைக்கழகங்களில் போதிய தரம் இல்லை. இதனால் சிங்கப்பூர் அரசு இந்தியப் பல்கலைக்கழகங்கள் வழங்கும் பட்டங்களை ஏற்றுக் கொள்வதில்லை. சிங்கப்பூரில் தரமும் திறமையும் முக்கியம். இதனாலேயே உலக அளவில் சிங்கப்பூரில் உள்ள இருபல்கலைக்கழகங்கள் உலகின் 20 பல்கலைக்கழகங்கள் பட்டியலில் இடம் பெற்றுள்ளது. பல நாடுகளில் இருந்து மாணவர்கள் கல்வி கற்க, சிங்கப்பூர் வருகின்றனர். இந்தியாவில் பல்கலைக்கழகங்கள் தரமான கல்வியை வழங்க முயற்சிக்க வேண்டும் என்றார். நிறைவாக, பேராசியர் கார்மேகம் நன்றி கூறினார்.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## மேருவைச் செண்டால் அடித்தது

அகஸ்திய மஹரிஷி தனக்குச் சொன்ன சோமவார விரதத்தைத் தவறாது அனுஷ்டித்து வந்ததன் பயன் போல உக்கிரவர்மரின் தேவியின் மணிவயிற்றிலே திருக்குமாரன் வந்து தோன்றினான். பிறந்த நன்னாளை மதுரைப்பதி சிறப்பாகக் கொண்டாடியது. சாதகன்மம் முதலிய விசேஷங்களைச் செய்து தன் மைந்தனுக்கு வீர பாண்டியன் என்று நாமகரணஞ் செய்தார் உக்கிரர். உற்ற வயதில் அம்மைந்தனும் கல்வி கேள்விகளில் சிறந்தவனாகிப் படைக்கலப் பயிற்சி பெற்றான். தனது அருமருந்தன்ன திருமகன் வளர்ச்சிகண்டு பெருமகிழ் வெய்தினார் பெருவழுதி.

அக்காலத்திலே கிரகங்கள் தத்தம் நிலைமாறிவிட்ட படியால் மீண்டும் பாண்டிய நாட்டிலே மழை வளம் குன்றியது. நீர் நிலைகள் வறண்டன. வறுமை நோய் நாடு முழுவதையும் வருத்தியது. சோதிடரைக் கலந்தார் பாண்டிய மன்னர். ஓராண்டுகாலம் மழை பொழியாது என்று தெரிந்தது. வழுதி பெரிதும் வருந்தினார். கவலை உள்ளத்தோடு சோமசுந்தரப் பெருமானின் சன்னதி சேர்ந்து, அண்ணலே ! உயிர்கள் பசியால் வாடுகின்றனவே என்செய்வேன்? என்று கண்ணீர் மல்கக்கூறி முறையிட்டார். பின்னர் எல்லையற்ற துன்பத்துடன் தன் மனைக்கேகினார்.

அன்றிரவு இன்னல் தோய்ந்த உள்ளத்தோடு தரையிலே நித்திரை செய்தார் பாண்டியர். சொக்கலிங்கப் பெருமான் சித்தராகக் கனவிலே வந்து ஒளிபடைத்த வேலினாய் ! இப்போது மழை பெய்யாதாகையால் நீவீணே வருந்தவேண்டாம். மலையரசனாய் விளங்கும் மகாமேரு பருவதத்தின் பக்கத்திலே பெரிய குகை யொன்றினுள்ளே அளவற்ற பொருள் சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றது. நீ சென்று மேருவின் தருக்கு ஒடுங்குமாறு செண்டால் அடிப்பாயாக. அது உன் ஆணைக்குக் கட்டுப்படும். பொன் பொதிந்துள்ள அறையின் மேலுள்ள பாறையை நீக்கி, வேண்டுகின்ற அளவுக்குப் பொன்னை வாரிக்கொள். பின்னர் அறைவாயை

அடைத்துவிட்டு உனது இலச்சினையை அதன் மேல் பொறித்து வருவாயாக என்று வாய்ச்சொல் அருளினார்.

உக்கிரர் அதிகாலையில் எழுந்து திருக்கோயில் சென்று சோமசுந்தரக்கடவுளை வணங்கினார். பின்னர்த் தனது சேனாசமுத்திரத்துடன் வடதிசையை நோக்கிப் புறப்பட்டார். யானையின் மேலே மீனக்கொடி வீறுடன்பட்டொளி வீசிப் பறந்தது. சோழம், தொண்டை, தெலுங்கம், கர்நாடகம், மாளவம், விராடம் முதலிய நாடுகளையும் இடையே குறுக்கிட்ட நாடு, மலை, ஆறு, பாலை முதலானவற்றையும் கடந்து கங்காநதி தீரத்திலுள்ள காசிமாநகரை அடைந்தார். கங்கையில் ஸ்நானம் செய்து விசுவநாதரை வணங்கி விடைபெற்றார். கொடிய விலங்குகள் வாழும் காடுகள் தாண்டி பல யோசனை தூரம் பரவியிருந்த பல கண்டங்களைத் தாண்டி, இமயம் கிம்புருட கண்டம், ஹேமகூடம் அரிவருஷ கண்டம் ரிஷதம் இலாவிருத கண்டம் ஆனவற்றைத் தாண்டி இறுதியாக மகாமேரு பர்வதத்தைக் கண்டார் உக்கிரபாண்டியர்.

உக்கிரப் பெருவிழுதி மேருமலையைப் பார்த்து மலையரசே ! தெய்வமலையே தேவர் ஆலயமே என்றெல்லாம் புகழ்ந்து விளித்தார். வாராமல் மேரு காலங்கடத்தியது. அதனது கையிலிருந்த செண்டினால் மேருவின் உச்சியிலே உரம் கொண்டு அடித்தார். வழுதியின் கோபம் தீர்ந்தது. மேருவின் கர்வமும் ஒழிந்தது. அசையாப் பெருமலை அசைந்து துடித்தது. அதனகத்தேயிருந்த அனைத்தும் நிலைகுலைந்தன. அடியுடன் பின்னர் நான்கு முகங்களோடும், எட்டுக் கரங்களோடும், வெண்குடை தாங்கிய உருவங்கொண்டு மேருமலைத் தெய்வம் வழுதிமுன் வந்து வெட்கி நின்றது. சோமசுந்தரப் பெருமானை வணங்க மறந்ததனால் தான் அன்று அடிபட்டதைத் தெரிவித்து வந்த காரணம் யாதோ? என்று வேண்டியது. பாண்டியர்கோன் யாம் பொருளை விரும்பி வந்தோம் என மொழிந்தார், மகிழ்வுற்ற மேருத்தெய்வம், அண்ணலே! விரும்பிய மாற்றுயர்ந்த செம்பொன் அந்த மாமரத்தின் நிழலின்கீழ் ஒரு பிலத்துள்ளே பாறையால் மூடப்பட்டுள்ளது. வேண்டிய அளவு எடுத்துக்கொள்க என்று தன் கரம் சுட்டிக் காட்டியது.

பாண்டியரும் மாவின் கீழிருந்த பொன் பொதிந்த பிலத்தருகே சென்று மூடிய பாறையை நீக்கித் தனது ஆசை தீரப் பேரளவு பொன்னை வாரி யெடுத்துக் கொண்டபின் முன்போலவே மூடிவைத்து எஞ்சியிருந்த பொன்னும் தன்னது எனக் கருதி அதன்மேல் தனது பெயரையும், முத்திரையையும் பொறித்தார்.

மீளவும் தனது சேனைகள் புடை சூழப் பெருவழுதி மதுரையம்பதிக்குக் கோலாகலத்துடன் திரும்பிவந்தார். எல்லாரும் நல்வாழ்த்துக் கூறி வரவேற்றனர். பாண்டியர் திருக்கோவில் சென்று ஈசுவரனையும் ஈசுவரியையும் வணங்கிவிட்டு அரண்மனை சேர்ந்தார்.

மேருமலை அளித்த பொற்குன்றம் பாண்டியக் குடிமக்களுக்குப் பசையளித்துக் காத்தது. கிரகங்களும் மீண்டும் தங்கள் பெரிய நிலை அடைந்தன. நாடு முழுவதும் மழை பொழிந்ததால் நல்வளம் பெருகியது. பசி நீங்கிய உயிர்கள் தழைத்தோங்கின.

இவ்வாறாக ஆரம் தாங்கு பாண்டியர் ஆட்சிபுரிந்த தனது திருக்குமாரன் வீரபாண்டியனுக்கு முடி சூட்டினார். அரசுரிமையை நல்கிப் பின்னர் சச்சிதானந்தப் பெருமான் சோமசுந்தரக் கடவுளின் திருவடியிலே இரண்டறக் கலந்துகொண்டார் உக்கிரபாண்டியர்.

## வேதத்துக்குப் பொருள் அருளியது

கண்வ மகரிஷியும், கர்க்க மகரிஷியும் நைமிசாரணிய வாசிகள். அவர்களும் மற்றும் பல முனிவர்களும் வேதங்களை முறைப்படி பலமுறை ஓதி வந்தனர். ஆனால், ஓதிவந்தாலும் வேதங்களின் உட்பொருளை அறியாது மயங்கி உள்ளமும் முகமும் வாடியிருந்தனர். அது சமயம் அரபத்தர் என்ற முனிவர் அங்கே வந்தார். அவர் ஆணவ மலத்தினை அறவே ஒழித்த புனிதர். வந்தவரை எதிர்கொண்டு ஏற்றனர் முனிவர்கள். முனிவர்கள் வாடியிருப்பதன் காரணத்தை வினவினார் அரபத்தர். முனிபுங்கவரே ! வேதத்தின் உட்பொருள் எங்கட்கு உணர்த்தும் குருநாதன் இல்லாமல் மருட்சி கொண்டுள்ளோம் ஆலோசனை எதுவோ? என்று கூறினர்.

அரபத்த மாமுனிவர் மொழியலானார்; "ரிஷிகளே ! வேதத்தை அருளிச்செய்த சிவபெருமானே அருளுருவம் கொண்டு

வேதப்பொருளை உணர்த்துவது அன்றி வேறு வழி ஏது? புண்ணிய க்ஷேத்திரங்களிலே சிறந்த கோத்திரங்களுள் உத்தமோத்தமமான சிவக்ஷேத்திரமான மதுரையம்பதியே தவத்துக்குரிய ஸ்தலம், ஏனெனில் மதுரைப் பெரும்பதியானது விராட் புருஷனுடைய பிரம மந்திரத்திற்கும் மேலே பன்னிரண்டு அங்குலம் உயர்ந்து விளங்கி துவாதசாந்த க்ஷேத்திரம் என்று பெருமையாக மதிக்கப்படுவது. சோமசுந்தரக் கடவுள் கோவில் கொண்டருளும் இந்திர விமானத்தின் தென்பாங்கிலே கல்லால மரத்தினடியில் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டும் தட்சணாமூர்த்தி எழுந்தருளியுள்ளார். அத்தகைமைசால் தட்சணா மூர்த்தியே உமக்கு வேதப் பொருளை உணர்த்தி அருளுவார். நீவிர் அவரது சன்னதி சேர்ந்து தவம் புரியுங்கள்".

அதனைக் கேட்டு மகிழ்ந்த கண்ணுவாதி முனிவரர்கள் மதுரை சேர்ந்தனர். பொற்றாமரைத் திருக்குளத்திலே தூய்மைபெற நீராடினர். பக்தி பெருகத் திருக்கோவிலுள் சென்று சொக்கநாதரையும் மீனாட்சியம்மையையும் வணங்கி வலம் வந்து தட்சணா மூர்த்தியின் திருமுன் அடைந்தனர். அங்கு நளிஆல நிழலின் கீழ் நற்புதுமை கண்டனர். கற்பவர் கனகிழவர். பொற்பவிரும் ஆசிரியன் பாலன் ! அறிவிப்பவன் மோனத்தால், மாசிரியும் சீடர் மனத்து ! சின்முத்திரை காட்டும் பரமாசாரியராகிய தட்சிணாமூர்த்தியின் முன்பு வீழ்ந்து துதித்தனர். பின்னர் அரபத்த முனிவர் அருளியபடி மேதா மந்திரத்தை நாள்தோறும் நன்னேரத்தில் ஓதி வந்தனர். கிருத்திகா பௌர்ணமி தொடங்கிமறு கிருத்திகா பௌர்ணமி வரை ஒரு வருஷ காலம் ஜபம் செய்தனர். ஹோமம் பிராமண போஜனம் முதலயைனவும் செய்துகொண்டு வந்தனர்.

ஆல்கெழு கடவுள் தட்சிணாமூர்த்தி கருணைகொண்டார். முனிவரவர்களது உள்ளம் பக்குவம் பெற்ற பிராமண குருவடிவம் தாங்கி முப்பத்திரண்டு லட்சணங்கள் விளங்க எழுந்தருளினார். நெற்றியில் திருநீறு துலங்கியது. திரு மார்பில் பூணூல் இனம் காட்டியது. திருக்கழுத்திலிருந்து உத்திராட்ச மாலைகள் தொங்கின. வலக்கையில்

தூய்மையான பவித்திரமும், இடக்கையில் சிவஞான போதம் எழுதிய ஓலைச் சுவடியும் விளங்கின. யாவரும் போற்றும் பழம்பொருள் எளிய வந்து காட்சி தந்து நின்றருளினார். ஆசாரியக் கடவுளை எதிரே கண்ட முனிவர்கள் வணங்கி நின்று, கலாநிதியே ! வேதார்த்தமாகி விளங்கும் வேத மூர்த்தியே ! அடைக்கலம் புகுந்தோம் என்று சொல்லினர். பின்னர் ஞானகுருவே அடியாராகிய நாங்களும் அகில உலத்தாரும் உய்யும் வகையில் வேதப் பொருளை உபதேசித்தருளவேண்டும் என்று மிகுந்த பணிவுடன் விண்ணப்பித்துக் கொண்டனர்.

கருணாநிதியாகிய பேராசிரியர் முனிவர்களை உடன் அழைத்துக்கொண்டு சிவலிங்கத்தின் திருமுன்சென்று வேதப்பொருள் உரைத்தருள்வாராயினர்.

சுயம்புவாகி, உத்தமோத்தமமாகி, தத்துவ வடிவமாகி விளங்கும் இச்சொக்கலிங்கமே நித்தியவேதத்தின் ஆதிகாரணப்பொருள். சுத்தாத்தைவத சுயம்பிரகாசப் பொருள், சாஸ்திரங்கள் பராபரன், விஞ்ஞானன், நிராமயன் என்று புகழ்வது எல்லாம் பரப்பிரம்மமாகிய இத்திருமூர்த்தியேதான். இம்மூர்த்தியின் திருவுருவமே வேதம். வேதப் பொருள் சிவலிங்கமே யாகும் ! சிவலிங்கம் வேறு, வேதம் வேறல்ல !

பின்னர் குருநாதர் சிவலிங்க தத்துவத்தையும், அகார, உகார, மகார, விந்து நாத உண்மைகளையும், காயத்ரி, சமஷ்டி, ஆனவற்றின் விளக்கங்களையும் இயம்பியருளினார். சிவாகமங்கள் இருபத்தெட்டும் ரிக், யஜுஸ், சாமம், அதர்வம் என்னும் நான்கு வேதங்களும் கரும ஞான காண்டங்கள் ஆகியனவும் உற்பத்தியான தன்மையை விளக்கியருளினார். நித்திய, நைமித்திய, காமிய கருமங்கள் மூன்றினையும் சிவபெருமான் திருமுன் இயற்றினால் பெறற்கரிய வீடு பேறான மோக்ஷத்தையே சிவபெருமான் தந்தருள்வார் என்று திருவாய் மலர்ந்தருளினார்.

வேதத்துட் பொருளை விளங்க உரைத்த பரமகுருநாதர் அருட்கனிவுடன் கண்ணுவாதி முனிவர்களைத் தமது அருட்கரத்தால் தடவிக்கொடுத்தார். பின்னர் சிவலிங்கத்திற்குள் மறைந்தருளினார்.

**Available Knitted Fabric** (On Order Basis)

| | |
|---|---|
| 18 GG Rib | Dia : 11 - 36 |
| 24 GG Single Jersey | Dia : 16 - 36 |
| 28 GG Single Jersey | Dia : 18 - 34 |
| 28 GG SJ Openwidth | Dia : 30 - 34 |

**Hosiery Yarn Available**

**PC / PV / 100 % COTTON / SLUB / VISCOSE**

***THE PARADISE KNITTERS***

2/311, Periyandipalayam Pirivu,
6th Cross, Hare Rama Hare Krishna Nagar
Mangalam Road, **TIRUPPUR - 641 687**
Mobile : 98652 04051 , 98651 22844 , 98422 70168

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)

(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

M.Com., M.Sc., முதுகலை பட்டப்படிப்பிற்கு
அழகப்பா பல்கலைக்கழகத்தில் அனுமதி பெற்றுள்ளோம்.
மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!

**2017 - 2018 ஆம் கல்வி ஆண்டிற்கான மாணவர் சேர்க்கை நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.**